# திருத்தணிகை யாற்றுப் படை



கழக வெளியீடு : ௧௨௧௭

உ

திருச்சிற்றம்பலம்

கச்சியப்ப முனிவர்

அருளிய

# திருத்தணிகையாற்றுப்படை



புரசை அட்டாவதானம்

திரு. சபாபதி முதலியாரவர்கள்

விருத்தியுரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி–6. சென்னை - 1.

1965

# பதிப்புரை

திருத்தணிகை ஆற்றுப்படை என்பது வீடுபேற்றினை விரும்பி முயலும் ஒருவனை வீடுபேற்றினை யடைந்தா னொருவன் தணிகை வரையில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானிடத்து ஆற்றுப்படுத்தது ஆகும். இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கையும் அருள வல்லது.

கவிஞர் பெருமானார் தவத்திரு கச்சியப்ப முனிவரால் தம் மாணவர் கந்தப்பையர் குன்மநோய் நீங்கி நலனுறும் பொருட்டுப் பாடியருளப் பெற்றது. இதனை நாள்தோறும் ஓதிவரவே விரைவில் அவர் நோய்நீங்கப் பெற்றார் என்று அறிந்தோர் கூறுவர். முருகப்பெருமானின் திருவருளை அடைவிக்கும் நெறிகளுள் இதுவும் ஒன்று என்பதில் சிறிதும் ஐயமில்லை.

சொல்நயம், பொருள்நயம், தொடைநயம் வாய்ந்து ஓதுவதற்கினியதாய் நுண்பொருள் செறிந்து விளங்குவதால் தமிழ்ப் பயிற்சிக்கும் இந்நூல் ஏற்றதாக விளங்குகிறது. திருமுருகாற்றுப் படைக்கு ஒப்பாகவே இதனைக் கூறலாம்.

இத்தகைய மாண்புகள் அனைத்தும் ஒருங்கே அமைந்து விளங்கும் இந்நூலுக்குப் புரசை அட்டாவதானம் உயர்திரு சபாபதி முதலியாரவர்கள் விரிவுரை எழுதியுள்ளார்கள். அவ்வுரை நூலின் நுண்பொருளையும தெள்ளிதின் விளக்கும் சிறப்பினை யுடையது; நச்சினார்க்கினியர் உரை நடையை ஒத்து விளங்குவது.

நூலின் மாண்பினை விளக்கச் சில சான்றுகள் காட்டுதும் அவை வருமாறு.

'நடுவின்று வாழ்வோர் நலத்தொடு முரண
நடுவின்று தேய்ந்த விடுகுகொடி மருங்குல்'

என மகளிர் மருங்குலையும்,

'மேம்மே லாகக் கிளர்ந்தெழி னத்தகு
வாழையொடு பொரூஉம் வார்ந்தசெறி குறங்கின்'

எனத் துடையையும்,

'ஊன நாடக மூன்றிய திருவருள்
ஞான நாடக நவிலிய மாறலும்
ஆறு மலப்பகை நோனது கழலத்
தானு நந்தத் தனியுயிர் மடங்கக்
கீட்காண் குருமுதற் கடவு ளாகி
உயிரே யவத்தை யுணர்த்துந் தன்மை
அருளி னியல்பே யாங்கதன் பயனே
பெரும்பெயர்த் திறமே பெற்றவர் முறையென்
றனை வகை யேழும் அரிறபத் தெரிப்ப'

என இறைவன் உயிர்கட்கு அருளுமியல்பையும் புதிய இனிய எளிய முறையில் இவர் எடுத்துக் காட்டியிருப்பது பாராட்டத் தக்கது, பிறவும் இவ்வாறே உள்ளன. ஆதலால், எல்லோரும் படித்து இன்புறுமாறு விரிவுரையுடன் பதிப்பிக்கலானோம்.

தமிழக மக்களும், தமிழ்மொழியை விருப்பத்தோடு பயின்று வரும் பிறநாட்டினரும் இடைவிடாது ஆதரித்து இத் தகைய திருத்தொண்டில் எங்களை மேலும் மேலும் ஈடுபடுமாறு செய்துவருவது குறித்துப் பெரிதும் மகிழ்ந்து பேரன்புடன் அனைவரையும் பாராட்டுகின்றோம்.

கற்பனைக் களஞ்சியமாகவும், இறைவன் திருவருளைப்பெற வழிகாட்டியாகவும் தமிழ்ப் பயிற்சிக்கு ஊன்றுகோலாகவும் உள்ள இந் நூலையும் எல்லோரும் வாங்கிப் பயின்று பயனுறு மாறும், எங்கள் திருத்தொண்டினை ஆதரித்து வளர்த்து வருமாறும் பணிவுடன் வேண்டிக்கொள்ளுகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## உரையாசிரியர் வரலாறு

திருத்தணிகை ஆற்றுப்படைக்கு விருத்தியுரை கண்டருளிய புரசை அட்டவதானம் சபாபதி முதலியாரவர்கள் கி.பி. 19 ஆம் நூற்றூண்டில் சென்னைப் புரசையம்பதியில் வெண்ணெய் வாணிகம் செய்து வந்த இரிசப்ப முதலியாரின் மகனுகப் பிறந்தார். அவர் அன்னையின் பெயர் முனியாத்தையம்மாள் என்பது.

இளமையில் தெருப்பள்ளி ஒன்றில் சேர்ந்து பயின்றூர். அப்பள்ளியின் ஆசிரியர் அச்சுதர் என்பவரிடம் சிறிய சிறிய செய்யுள் நூல்களையும், இலக்கண வினுவிடையையும், அவதானஞ் செய்யும் முறையையும் நன்கு கற்றுத் தெரிந்துகொண்டார். பின்னர் உயர்தரப் பள்ளியில் சேர்ந்து பயின்று ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் முதல்வராகத் தேர்ந்து பரிசுகளும் பெற்றூர். மேலும் தமிழ் கற்க விரும்பி அவ்வுயர்தரப் பள்ளியின் தலைமைத் தமிழ்ப் புலவர் தாண்டவராய முதலியாரவர்களிடம் கற்று வரும் பொழுது நீதி மன்றத்தின் தலைவராக நியமிக்கப்பட்டு அத் தாண்டவராய முதலியார் வேற்றூருக்குச் சென்றுவிட்டார். அதனுல் காஞ்சிபுரம் மகாவித்வான் சபாபதி முதலியாரிடம் சென்று பல நூல்களை முறையே பாடம் கேட்டுவரலானுர். பாடங் கேட்கும் காலத்தில் சென்னை அரசாங்கத்திற்குரிய கணக்குப்பிரிவு காரியாலயத்தின் தங்கசாலைக் கிளை அலுவலகத்தில் ககசு ரூபா திங்கள் ஊதியமாகப் பெற்றுக்கொண்டு பணிசெய்தும் வந்தார். சில திங்களுக்குள் தங்கசாலை அலுவலகம் மூடப்பட்டது. மூடப்பட்டபின் முன்னேர் (தந்தையார்) ஈட்டிவைத்திருந்த செல்வத்தைக் கொண்டே வாழ்க்கையை நடத்திவந்தார். மேலும் மேலும் கற்றுக்கொண்டே இருந்ததனுல் வேறு தொழிலை விரும்பவில்லை. அவர் விரும்பியிருப்பின் அக்காலத்தில் மிக எளிதில் வேலை கிடைத்திருக்கும்.

காஞ்சிபுரம் சரவண தேசிகர், மழவை மகாலிங்கையர், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், புதுவை நயனப்ப முதலியார் முதலிய புலவர்களிடமும் முறையே பாடங்கேட்டு இலக்கிய இலக்கண

நூல்களிலும், சித்தாந்த நூல்களிலும், திருமுறைகளிலும், புராணங்களிலும் மிக்க தேர்ச்சியுற்றுப் பெரும் புலவராக விளங்கிவந்தார். இவர் கற்காத நூல்கள் அப்பொழுது தமிழில் இல்லையென்றுகூடச் சொல்லிவிடலாம்.

விரைந்து புதிதாகப் பாடும் திறனும், நுண்ணிய பல கருத்துக்களைத் தெள்ளிதின் விளக்கி உரையெழுதும் ஆற்றலும் நிரம்பப் பெற்றிருந்தார் என்பதை இவர் பாடிய பாக்களும், எழுதியுள்ள உரையும் இனிது விளக்கும்.

திருப்போரூர்ப் புராணம், திருப்போரூர்ப் பதிற்றுப் பத்து அந்தாதி, காஞ்சி குமர கோட்டக் கலம்பகம் முதலிய பல செய்யுள் நூல்களைப் பாடியிருப்பதோடு, திருத்தணிகை ஆற்றுப் படை, கந்தரனுபூதி, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ஆகிய இவைகளுக்குச் சிறந்த உரையும் எழுதியுள்ளார்கள். திருப்போரூர்ப் புராண உரை நடையும் இவரால் எழுதப்பட்டதே.

பல மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்துப் பெரும் புலவர்களாகத் திகழுமாறும் செய்துள்ளார்கள். அவர் நெறியை மேற்கொண்டு நாமும் தமிழன்னைக்குப் பணிசெய்து வருவோமாக.

---

உ

கணபதி துணை

# திருத்தணிகையாற்றுப்படை

## விநாயகர் காப்பு

### நேரிசை வெண்பா

*சீரார் தொடைபுனைந்த செம்பாவை முன்புபோ*
*லேரார் தணிகை யிளவற்கு—நேராகக்*
*கூட்டுமால் வேற்றுருவங் கொள்ளாமை யெப்பொருளுங்*
*காட்டுமா லங்கைக் களிறு.*

## நூல்

பொன்மலைத் திருவிற் பன்னக நெடுநாண்
மாயப் பகழித் தாயக் குரிசின்
முரணமை யிருகாற் றிரண்மறைப் புரவி
யலர்மறை வாழ்க்கை வலவத் தேரும்
வழங்குதற் கமையா வண்மையி னிசைக்கும்
பெருந்தகு பாடற் றிருந்திசைப் புலவ
ரறன்கடைக் ககலாப் பிறங்குதம் முளத்திற்
சாலாக் கல்வி மாலார்க் ககலா
வரன்மாண் டமைந்த வுரன்மாண் பலகையிற்
றண்டா விருப்பி னெண்டோண் முதல்வனோ
டானாது பயிலிய வருமறைக் கேள்வி
மாயிருந் தமிழ்க்கடல் வடமொழிக் கடலென்
றுயிரு கடலு மாற்றலிற் கடையா

ஐயந் திரிபெனு மழல்விடம் படாது
வெய்யசெம் பொருளெனு மிளிர்தீஞ் சுதைத்திர
ளாராக் காதலி னூராது கைப்பவு
மூன்றுவிர லழுந்தா துடறசை திணிந்து
கான்றதேந் தெரியற் கருங்குழன் மகளிர்க்
கணங்குள நிறீஇ யாருயிர் கவர்க்கும்
வளங்கவின் கொழிக்கும் விளங்குசீ ரிளமையும்
பல்வகைத் தொழிலும் பண்புற நவின்று
சிந்தை வழிச்செலு மைந்துநிலை பெறீஇய
ரளவினைத் திறத்தி னயரா யாக்கையு
மளகைக் கோமா னுளமழுக் கறுப்ப
நிலந்தினக் கிடந்த நெடுநிதிச் செல்வமு
நீடின் றிரியு நிலைமை நாடி
யேற்போ ரங்கைக் கொடைக்கட னிறுத்து
நோற்போர் நோற்கும் நோன்மைசா லறனெனு
முறுதி யாக்க மொய்யெனக் கழலவும்
வரைத்திரள் புரள்விற் றிரைத்தெழுந் திரைக்கணம்
விலங்கின வழங்கும் விழுக்கலன் செறித்து
மொளிறுவே லழுவத் துருத்தெழுந் தடர்த்துக்
குளிறுவார் முரசும் பிளிறுமால் யானையும்
வைத்தபல் படையும் வழாதுகைக் கொண்டு
பராபவத் தெவ்வர் வரிசையி னிறுக்கும்
திறைகே ழுரிமை முறைநேர் நடாவியும்
தத்தந் தொழிலிற் றலைநின்று வளர்க்கும்
பொருளெனும் வெறுக்கை பொற்றுது நழுவவும்
மிஞிறுந் தேனும் வெறிகவர் தும்பியும்
கஞலிப் பட்குரல் கஞற்றுவ சுழலும்
இருடெஞ்சு மலர்ப்பொழின் மருள்சில் லொதிப்
பூவார் சோலைப் புறத்தகப் படுத்து

மேவரத் தடைஇய விதுக்குறை கடுக்கும்
திவளொளி மாண்ட குவவுநுதல் வாணுதல்
தீங்கதி ரமிழ்தத் திங்கட் பிளவி
னீங்குகார்க் கறையு நிலாத்தவழ் வெண்மையும்
விராயுருக் கொண்டென மிளிர்மதர் மழைக்கட்
செங்குமு தத்துச் சிறுமதி கிடந்தெனச்
செவ்வா யகத்த செயிர்தீர் வெண்பல்
விலங்குபாய் கதிர்க்குழை வீழ்ந்துசெகிற் றுயல்வர
வள்ளையி னொழுக்கிய வள்ளெழிற் செஞ்செவி
செவ்வாய் கவுட்டுணைச் சேல்விழி நெற்றி
யிவ்வா யுறப்பா னின்சுவை யமிழ்த
வுறுகோடை யாற்றி வறிதுகோடை காட்டும்
வளைநிதி தன்னைக் குடமிகைக் கொண்டவ்
வளைமேல் கொண்டு வயங்கொளி தோற்றும்
பதும மாநிதி யிதுவெனக் கவன்று
தாவா வுறுவர் மேவா வுள்ளமு
மோவப் படமென வுளூற்றுறு திருமுகப்
பகுவாய்ப் பொற்குழை மகரமீ னஅன்
றைதுமீக் கிடத்தலி னைங்கணைக் கிழவோன்
வெய்துதன் றுணை விளக்கிய வுயர்த்த
வணங்குதவழ் கொடியி னிணங்குபணை வேய்த்
காம்புபுடை யடுத்த கதிர்மணிக் குன்றின் [தோட்
தோள்புடை யடுத்த சுடர்ப்பூட் கொங்கை
குவிமுலைத் துணைகொள் சவிமணி மார்பிற்
றத்தம தேணி கடவாது தணிய
நள்ளுநின் றுணர்த்துந் தள்ளாக் குழியி
னணிவயிற் றெழுகிய மணிமயிர் வல்லி
நெடுகுமயி ரொழுக்கு நெடுவேழிப் படர்ந்து
கடுமுலைக் கோட்டுக் களிறுபட வெடுத்த

படுகுழி யனைய பயம்படு கோப்பூழ்
நடுநின்று வாழ்வோர் நலத்தோடு முரண
நடுநின்று தேய்ந்த விடுகுகோடி மருங்குல்
வையக முயிர்த்தோன் மதிபுனைந் தியற்றலிற்
கைபுனைந் தியற்றுங் கதிர்மணித் திண்டேர்
கடாதுருக் கொண்டோடுந் தடாதபே ரல்குற்
கீழ்மே லாகக் கிளர்ந்தெழி னத்தகு
வாழையொடு பொரூஉம் வார்ந்தசெறி குறங்கின்
வேற்றொரு தாமரை மேவந்து தொழில்செய
வீற்றிருந் தருளும் விரைமல ரேய்க்கு
மலத்தக மலர்ந்த நலத்தகு சீரடி
மயிலியன் மருளு மியன்மட மாதரைச்
சீலம் விழைவே செயல்குறி யிவற்றான்
நால்வகைப் பேதமு மாலறத் தெரிந்து
மருந்துமந் திரத்துந் திருந்துவிழை வேற்றித்
தேயம் பயிற்சி சேட்டை யியல்பே
யின்பத் துறையே யிருவகைத் தொழிலே
யிங்கித வகையே யிவைநனி நாடி
யிருவகைப் பொழுதோடு மேற்ப மருவிய
மூன்று காலமு மூன்று வேகமு
மொப்பக் கலவி யுஞற்றுபே ரின்ப
அவாவுளம் போதிந்துகொண் டழற்றுவெம் படர்
தவாதுபிறை போலத் தணிவின்றி வளர [நோய்
வுவாமதி போல வருவே தபவும்
கடவுட் பொங்கரும் தடமருப் பாவும்
சிந்தா மணியு நந்தா நிதிகளும்
கலன்முத லான வளம்பல கொழிப்ப
பல்வகைக் கணமும் பணிந்தெழுந் தேத்த
தெவ்வுத் தானவ ரவ்வித் தேங்க

விரிகதிர்ப் பிழம்பு மரிமான் றவிசிற்
களிகூர் நெஞ்சாற் காவல் வைகு
மொளிகூர் மகவா னுறுபத மாதி
யெளிதினுய்த் தளிக்குந் தெளிவினை போலாது
பார்முதிர் புணரிப் பாயற் கடவுள்
வார்மதுப் போகுட்டு மரைமலர்ப் புத்தேள்
என்றிவர் தமக்கு மெய்தற் கரிய
சரியை கிரியை யோகத் தவநிலைப்
பெயர்போச் சாப்பப் பிறக்கணித் துகவு
மூன நாடக முஞற்றிய திருவருள்
ஞான நாடக நவிலிய மாறலு
மாணு மலப்பகை நோனது கழலத்
தாணு னந்தத் தனியுயிர் மடங்கக்
கட்காண் குருமுதற் கடவு ளாகி
உயிரே யவத்தை யுணர்த்துந் தன்மை
யருளி னியல்பே யாங்கதன் பயனே
பெரும்பெயர்த் திறமே பெற்றவர் முறையென்
றனைவகை யேழு மரிறபத் தெரிப்பத்
தாழாது கேட்டு வீழாது சிந்தித்
தங்கைக் கொண்ட வமிழ்தெனத் தெளிந்து
பொங்குபே ரின்பம் புணராது புணரு
நிட்டை கூட நிலையது நீங்கவும்
பஃறிறப் பகைஞர் படையொடு நேர்ந்தென
வெஃறிறங் காட்டாது வீற்றுவீற் றுடற்றும்
பிணிக்கோட் பட்டுப் பேதுறு மனத்தான்
முந்தையோ ரீட்டு முழுநிதிச் செல்வமும்
பொய்ம்மை யாளர் புகழெனத் தேய
நோய்ப்பகை யாளர்க்கு நொடிந்தென் சிதரிற்
பல்வகை மருந்துக்குப் பகர்விலை தொலைச்சி

யதுவென வெறுவிய தன்றுமற் றிதுவென
முன்னைநாண் மருந்தை முறைமுறை யிகழாப்
பின்னைநாண் மருந்தைப் பெட்டுவாய் மடுத்துப்
பண்டைநோய் மேலும் பருகுபன் மருந்தான்
மண்டுநோய் வேறு மரீஇக்கிளர்ந் துருப்ப
வுரைத்தவென் மொழிவழி யொழுகினை யல்லைகொல்
பெருத்துநோய் தேறுமென மருத்துவ ஞெழியத்
தெய்வத் திறத்தாற் றீர்வுகாண் பாமென
வுள்ளூர் வயின்வயின் றெள்ளிதி னோங்கும்
புரிமுறுக் கவிழ்க்கும் பூம்புனற் றீர்த்தமும்
பல்வகைத் தெய்வப் பசும்பொற் கோட்டமும்
படிந்தும் பணிந்தும் பயன்கா ணுமை
யணியயற் புறநகர் மணிகெழு கோட்டமும்
விரத நியதிப் பரவு கடனுதிப்
பல்வேறு தொழிலொடு படர்ந்துபணிந் தேத்தியுங்
கவலை நெஞ்சங் கையறு பினையச்
சேட்சென் றொராஅல் செய்தென வலித்து
மிக்கநோய்க் கிரங்கு மொக்கல்புறந் தழுவ
வறுமைக் கவற்சியு மிறுகுறப் பிணிப்ப
வில்லுந் தமரு மிசைபயி னுடு
மென்மெலக் கழீஇ விரிகதிர்ப் படையா
லிருள் கால்சீக்கு மெழுபரித் தேரோன்
கடுஞ்சினந் திருகிய கொடுமைகூ ரமயத்து
முளிமுதன் முருக்கிய முழங்கழல் பொழ்ந்து
வளியுலாய்ப் புறத்தும் வழங்குநர்த் தெறூஉம்
பைதரு கானத்துப் படர்நெறி யொதுங்கலின்
முந்துபர லுழந்த வெந்துயர்க் கொப்புள்
பிந்துபர லுழத்தொறூஉம் பிளந்துநீ ருகுப்ப
வியங்காச் செல்ல லிணையடி தாங்க

வேயிற்பகை யுழந்த வேர்ப்புற நனைப்பச்
சூறை மாருதந் துறைத்துறை யெடுத்த
பூழி போர்த்த பொற்பறு மாசு
கலுழ்நீ ரல்லது கயந்தலை யின்மையிற்
கழுவுதல் புரியா முடைபயில் காயமோ
டிலையின் மராத்த நிலையின் மென்னிழற்
சேய்வரல் வருத்தஞ் சிதைபாக் கசைந்து
நெட்டுயிர்ப் பெறிந்து நினைதரு மிரவல
வாற்றா நின்னுளத் தவலமினி யொழிக
புளினரு மருளும் போக்கருஞ் சுரத்து
வீற்றுவீற் றெழுகு மாற்றினிற் றிரியா
தொருநெறி யெதிர்ப்பா டுற்றது முன்னைப்
பழுதறு பெருந்தவப் பயனது போலும்
விழும வெந்துயர் முழுதொரால் வேண்டிற்
பாணியா தின்னே காணிய வெழுமதி
தோறேர்க் கோடுந் திருக்கோட் டிரலையி
னேய்ப்பகை யென்ன வாய்ப்பிலா தமையு
மடுத்தடுத் தியானு மலமரு காலை
யூரூர் வைகிய சீர்கெழு மாந்தரு
ளுண்டி கலவி யுறுதொழின் முதலா
மண்டிய பகுப்பின் வரையறைப் படாது
வேறுவே றுயிர்க்கும் வெம்பிணி யாளருங்
கருவி போழ்ந்த பெரும்புண் ணுறுநருங்
குட்டம் பெருநோய் முட்டிய வாத
முயலக னாதி மொய்ப்பிணி யுழவரும்
பாப்புக் கோளாதிப் பலவகைக் கடிஞரும்
பேய்கோட் படுநரும் பித்துமீக் கூர்நரு
முறுப்புக் குறைநரு மொண்குண மிழநரு
மின்ன பஃறிறத் தெனைவரு மன்றிக்

கல்விவேட் டவருங் கான்முளை வீழ்நருஞ்
செல்வம் வீழ்நருந் தேயநா டுநரு
மலர்முலை மடவார் கலவிகா முறுநரு
மிரண்டறு கலப்பி னின்பநச் சுநரு
மினையபல் வேறு நினைவின ரேவரும்
வாட்டுவ தணப்பவும் வேட்டன மணப்பவு
மேற்கொண் டெழுந்து மேனா ணேர்ந்த
பொற்கிழித் திரளும் பூந்துகின் மூடையும்
மணிப்பூட் பேழையும் வார்தரு கவரியும்
பைம்பொற் கவிகையுஞ் செம்பொற் சிவிகையு
மூர்தியுங் கொடியும் வார்விசி முரசுஞ்
சூட்டுவா ரணமுந் தோகைய மயிலுந்
தத்தமக் கியன்ற தழீஇயினர் போத
மோசைதிக் கதிர்க்கு மாசனப் பெருக்கங்
காண்டோறுங் காண்டோறு மீண்டிய களியே
னுடங்குசென் றிருப்பா னொருப்பட் டெழலுந்
துன்னிய விழுமநோய் தன்ன நீங்க
வுறுதுயர் யாக்கை சிறிதுவலி யெய்த
வொய்யெனக் கிளர்ந்த வுவகைநெஞ் சத்துப்
படர்பே ரூக்கம் பிடர்பிடித் துந்த
வெழுந்தன னிம்மென வேகுத றொடங்கி
யடிபெயர்த் தோறு மஞர்ப்பிணி நழுவ
வுவரி நீரிற் றவவெழு மகிழ்வா
லவன்மிசை பாடாஅ வனைத்து நெறியாகச்
சென்றன னடுத்து மன்றனகர் நுழைதலும்
வெருவுநோ யிருகூற் றொருகூறு விலங்கக்
காட்சி யார்வங் கையிகந் தீர்த்தலின்
நறுமணங் கமழு நந்திநதி குடையா
தெழுமுனி வரர்த மெழுசுனை யாடா

தலைமலைப் பகைஞ னருட்கயம் படியாது
நாக வண்சுனை நன்புன றேயாது
விண்டு தீர்த்த மேவரக் குளியா
தலரவ னிருஞ்சுனை யழிபுனன் முழுகா
தேத்துயர்த் திரளு மத்தினத் தகற்றுஞ்
சரவணப் பொய்கைத் தடம்புனற் றளைந்து
மென்மேலக் குன்ற மீமிசை யிவர்ந்து
காலை நண்பகன் மாலைமுப் போதும்
வைகல் வைகன் மலர்மூன்று தெரிக்கும்
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது
புரண்டனர் சூழும் பொற்பினர் மிடைதலி
னடியிடப் படாஅ வாரிடை வீதி
யோதுங்குபு பைப்பய வொருமுறை சூழ்ந்து
தூவுமெண் ணிலத்துத் தோயாது வெறுத்த
தேவர்கள் குழுவுந் தேயத் தொழுதியுந்
தடைஇய வாய றடையாது நுழைந்தாங்
கொருவர்மெய் மணிப்பூ ணொருவர்மெய் வடுச்செய
நெருங்கிச் சென்று நித்தில வாணகை
வள்ளி நாயகி மணத்தினை முடித்த
கள்ள வேழக் கடவுளைப் பணியா
வீரரோன் பதின்மர் வார்கழ றூழ்ந்துமற்
றுவயின் வதியு மமரரைத் தொழுது
பூதப் பகுப்பும் பூதகா ரணமு
மிந்தியக் கூட்ட மிரண்டுமுக் குணமு
நந்துமாங் காரமு நலத்தகு கரணமு
மிறுவாய் மாயை யெழுவா யெழுஞ்
சுற்ற மென்னத் தோன்றிய வைந்தும்
விராய்நின் றியக்கி மராதுநின் றுளிரு
மாரா வின்ப வருணிலை யம்ம

தீரா மலப்பிணி தீர்த்தருள் கொழிப்ப
வருட்டிரு வுருவுகொண் டவிர்மணித் தவிசின்
ஞான சத்தியுங் கிரியா சத்தியும்
வானவர் கோமான் வளம்பயின் மகளுங்
கானவர் நலங்கூர் கன்னியு மென்ன
விரண்டு பாலு மிருந்தனர் களிப்பக்
கண்டமெய் யடியர் கலவினர் போற்றக்
காணா விண்ணவர் கலவா தேத்தக்
கட்கடை யொழுகுங் கருணை நோக்கமோ
டினிதுவீற் றிருக்கு மெழினேர் காண்டலு
மெஞ்சுநோய் துவர விரியல் போக
விஞ்சுநாற் பொருளு மேவந்து துவன்ற
வாற்றுக் கடுந்துய ரருநர குழப்பவர்
நோற்றமுன் னூழ்நனி நூக்கலு நொடிப்பி
னாயிடை நின்று மாயிருந் துறக்கம்
புக்குழிப் பொலிவித் தோக்கதோற் றத்து
விம்மித மகிழ்ச்சி மெய்தவ வீக்க
வொருகதி விட்டுமற் றொருகதி யடைந்தவர்
மயங்கறி வென்ன வுயங்குமுன் னுயங்க
லெய்யே னாகி யிறுமாப் பெய்தி
செய்முறை தெரியாது திருமுன் னிற்ப
விருமைப் பயனு மெளிதினுற் றளிக்கும்
பூதியுந் திருவுருப் பூச்சுநன் களித்திட்
டென்னைத் தன்வச மாக்கிய வுலகை
யென்வச மாக்கி யென்றுமோ ரியல்பி
னின்றதன் னிலையி னீங்கா திருத்தி
விடாதுவிட் டருள மெய்யருண் மேற்கொண்
டொழியா தொழிந்து வழிவரு கின்றன
னத்தகு பெருமா னருள்விளை யாடலைச்

சற்றிது கேண்மதி தவமேம் படுந
விச்சோன் றின்றி விளைவுமிக் காக்கியும்
விச்சுமிக் கிருப்ப விளைவுமுழு தொழித்து
மொளிதலை வளர்ப்ப வொளிகளைத் தணித்து
மழுக்கினைக் கழுவ வழுக்கினை யேற்றியு
முறுந்தொழி லாளர்க் குறுதுசே ணகன்றும்
வறுந்தொழி லாளர்க் குவந்துடன் கலந்தும்
விதித்தநல் விதிகளை விலக்கென வுவர்த்தும்
விலக்கினை விதியென மேதக நயந்து
மித்தகு தொழின்மை நித்தலு மியற்றிப்
போற்றபே ரின்பருள் பெற்றிய னஃதான்
றிருமுது குரவ ரேழுவாய்ச் சுற்றமோடு
துயரிலங் குலகந் தோற்றுதற் பொருட்டுத்
தந்தை யென்ன வைந்துமுக னாகியு
மன்னை யென்ன மனோன்மணி யாகியும்
முன்முறை தந்தையர் தாய ரென்ன
நாதஞ் சிவமே நலத்தகு விந்து
மேதகு சத்தி வேறுவே றாகியும்
பின்முறை தந்தையர் தாய ரென்ன
மகேச னுருத்திரன் மகேசையுமை யாகியுந்
தமைய னென்னத் தந்திமுக னாகியுந்
தனைய னென்னத் தாமரை மருட்டு
மூவிரு முகமு முன்னான்கு கரமு
மருவிவீற் றிருக்கு மொருதா னாகியுங்
கடப்படு மிரண்டு கைகோ ளியங்க
நான வார்குழ னகையிழை யானையைக்
கானவ ரரும்பெறற் காமரு மாதினைக்
கற்பினிற் களவினிற் பொற்புற மணந்தும்
பொருட்டுறை முழுதும் புரையின்றி நடப்ப

வண்டகோ டிகளு மரைக்கணத் தளவையின்
வறிதுநகை தோற்றி யிறுவது புரியு
மெறுழ்வலி யாற்ற லெய்யான் போல
மந்திரந் தூது செலவிகன் மற்று
மாற்றிவெஞ் சூர்வலி காற்றியுல கோம்பியு
மெல்லா மறிந்தறி விக்குமவ் வியல்பைக்
கண்கூ டாகக் காட்டுவ னதாஅன்று
மூவகை யுருவாய் மூவுல குயிர்த்து
மூவகை யுருவு முயங்காப் பரம்பொருள்
பந்தம் வீடு பல்லுயிர்க் கமைத்தும்
பந்தம் வீடு படாத பெருந்தகை
யாருயிர்க் குயிரா யமைந்தன னடாவியு
மாருயிர் காட்சிக் கணுகா வருந்திறற்
றுணய் நின்று தற்காண் டனிமுத
லளிகளி னளியா வளிகளுஉங் களிய
னொளிகளி னொளியா வொளிகளுஉங் கொளியன்
வெளிகளின் வெளியா வெளிகளுஉங்கு வெளிய
னளவினி னளவா வளவினுஉங் களவ
னின்னு னொருவனை முன்னுபு சென்றவன்
பூங்கழற் சேவடி போற்றுதி யாயின்
பேரஞ ருறுத்த பேதுறு நோயுங்
காரண நோயுங் கையிகந் திரியக்
கடைக்கணித் தருளிக் கரையினுற் பொருளுங்
கோடைக்கட னீயிர் குறித்த வளவையி
னெண்மடங் காற்றி யென்றுந் தீரா
வகம்படித் தொழின்மையி னழுத்துவ னன்றே
யாடகப் பசும்பொற் பாடகச் சீறடி
நாடக மகளிர் நவிற்றிய வாடற்
சிலம்பு கிண்கிணி தீங்குழன் முழவ

முரசந் தூரி முழங்கொலி யானும்
விண்டல முரினும் வியன்மணிப் புரிசைக்
கொண்டல்கண் படுக்குங் கோபுர நிரைக
ளாடுகொடி சுமந்த மாடநெடு மாளிகை
யின்னன பிறவு மன்னுத லானு
மொலிதிரைக் கடலு மோங்குபல் வரையு
முடங்குதோக் கண்மி யொண்டுறை யாடி
யிருபகுப் பினவா யிருகரை மருங்கும்
நோற்றன வதியும் பேற்றினைத் தெரிக்கு
மும்மையு மளிக்கு மூவா முழுமுத
லைம்முக னாகி யமர்ந்தவீ ரட்டமு
மறுமுக னாகி யமர்ந்தகீழ்க் கோட்டமும்
பொன்னு மணியும் புதுமலர்க் குவையும்
திரைக்கயிற் றாஉய்த் திளைத்தெழுந் தொழுகு
நந்தி யாற்று நறும்புனன் மடுக்குங்
குரங்குகதிர்ச் சாலியுங் கொழுந்தீங் கரும்புங்
குலைப்பூங் கதலியுங் கோட்டெங் கினமுங்
கோள்கண்மீப் பரிக்கும் பாளைக் கமுகும்
வயின்வயிற் பொதுளி வளம்பல வுறந்த
முருகலர்ப் பண்ணை யொருபுறஞ் சூழ
வவரை துவரை யரிற்கதிர் வரகு
சாமை யிறுங்கு ததைந்தன விளையுங்
கொல்லை முல்லை கொழிணர்ப் பூவையும்
பந்தர் மாதவி யுந்திய கோங்கும்
பைங்காற் கொன்றை பசும்பொற் சுண்ணமும்
வளியுளர்ந் தெடுப்ப மறுபுல வரைப்பும்
போர்த்தன கமழ்ந்து பொழிவண் டழைக்கு
மரும்புலப் புறவ மொருபுறஞ் சூழச்
செருந்திமந் தாரங் குருந்துவழை பாடலம்

கோங்கு சண்பகம் வேங்கைமகிழ் சந்தனம்
குங்கும மரவங் கோழகிற் கப்புர
மில்ல மாவிரை வில்லம் பாங்கர்
பிடர்ஞெமை நமையாண் டடர்வரை யெகின்சே
வசோகந் தேக்கே யாத்தி சூத
மருது போதி வஞ்சி காஞ்சி
ஞாழல் புன்னை நரந்தை மாதுளை
போகுட்டரை யிருப்பை பூஞ்சினைச் சரள
முன்னம் பலாசு முருக்கை வருக்கை
சோதி மாமரந் தோத்தின நாக
மன்றி யனைத்துந் துன்றிய கறிக்கோடி
மல்லிகை முசுண்டை மற்றும் பரித்து
மணங்கமழ் காமர் வல்லி யோன்றே
யிணங்குபூத் தருந்த னிகழ்ச்சியை நாடி
வசைபடத் தத்த மிசைவிளக் குவபோற்
போறிவரிச் சுரும்பும் வேறிநகர் தேனுந்
தோகைமா மயிலுந் தோடிக்கட் பூவையுங்
கிள்ளையுங் குயிலுந் தேள்ளுகுரற் காட்டி
வண்டளிர்ப் போதும்பர் மருங்குகால் வளைஇ
நண்டளி நறுந்தே ஞேலாது திவளுந்
ததைமலர்ச் சினைய தருவைந் துடுத்த
போன்னகர் வறுமையை முன்னிநக் காங்கு
வேர னரன்றக்க வேண்மணிக் குப்பையும்
பிறழ்பற் பேழ்வாய்ப் பின்முன் பார்வைச்
சிங்கவல் லேறு போங்குசினந் திருகி
யெழுந்துதாய்த் துமிப்ப விருங்கடா யானை
மத்தகம் பிளந்து மாயிருங் குன்றத்து
வேண்புன லருவி வீழ்வன போலச்
சலசல வுக்க தரளக் குவாலு

நிலவுராய்த் தவழ நெமிர்ந்தன மிளிருங்
கவான்மலைப் புனத்துக் கதிர்த்தினை காக்கு
முவாமதி முகத்தா ரோச்சினர் விடுக்குங்
கவணையின் மணியோ கங்குற் கானவர்
விலங்கினங் துரக்கு மிலங்குகூர்ங் கணையோ
வலைத்தர விசும்பி னிலைத்தரு கலன்கள்
பல்வகை மின்கோடி யோல்கிவீழ்ந் தென்ன
வெல்வரை நிரையும் பில்குகதிர் மணிப்பூங்
காழுங் தாமமுங் கவினத் ததைஇய
மண்டப மேடை மாடமே னிலைக
ளியங்கா நிலைத்தே ரியங்குமணிப் பஃறேர்
விமானவூர் திகளும் வேற்றுமை தோற்று
வளம்பல தழீஇயெம் மருங்குமெய் யடியா
ரிடுமெகிற் றூமமு மேக்கரிற் குவைஇய
படரொளி யூட்ட பளிதக் குப்பை
கான்றதீம் புகையுங் கழுமிவிண் கெழுமி
யிமையார் நாட்ட மிமைப்பன செய்ய
மல்ல லாவண மறுகும் வீதியு
நாடோறு மெழிலா னவநவ மாகி
யிமைக்குநர் நாட்ட மிமையாமை செய்ய
மண்டலம் விண்டல மாற்றிய தென்ன
விறம்பூது பயவா வேர்குலாய்க் கிடந்த
திசைகாப் பாள ரிசைநிறை தேவ
ரலரவ னெடுமோ லாதிய கடவுளர்
முதுக்குறை யன்பின் முறைமுறை பழிச்சச்
சாறுநா ளல்லது வேறுநா ளறியா
துலகமுழு தோம்புபல் சிறப்பி
னிலைபெறு தணிகை மலைகிழ வோனே.

# விருத்தியுரை

## காப்பு

சீரார்.............................................களிறு

இது கடவுள் வணக்கம்—என்பது இந் நூல் இடையூறின்றி முடிவு கூடற்பொருட்டு நூலாசிரியர் தாமெடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளாகிய மூத்தபிள்ளையாருக்கு வணக்கஞ்செய்தல்.

நூல் கூறுவார் முதற்கண் மங்கலமொழி வகுத்துக் கூற வேண்டுதலால், மங்கலமும், எழுத்துத்தானமும், கணமும் நன்கியைந்த "சீரார்" என்றும், இந் நூற்பொருட்பயன் ஈண்டுப் பயப்பதாக நிற்றலானும், உலகியல் நடத்தற்கேது வாகப் பிள்ளையார் வள்ளி நாச்சியாரைக் குறிச்சியின்கண் திருமணம் செய்துகொண்ட கோலத்தொடு அத் திருமலைக்கண் வந்து வீற்றிருந்தமையானும் தொடைபுனைந்த செம்பாவை யென்றும் கூறினர்.

திருத்தணிகையென்னும் அடையடுத்த பெயர்க்குச் சீர் என்னும் மங்கலச்சொல் பாலதானமும், சீரார் என்பது நேர்நேர் ஆகலின் உயிர்க்கணமும், தணிகையென்னும் அடையடுக்காத பெயர்க்கென்னின் குமாரதானமும் இயைந்து நிற்றல் காண்க.

இத் திருமலைக்குச் செருத்தணியென ஒரு பெயருமுள்ளது. அது முன்னர்ச் சூரபன்மன் செய்த போர்த்தொழிலினும், பின்னர் வேடர்கள் செய்த போர்த்தொழிலினும் பிள்ளையார் கொண்டிருந்த வெகுளி தணிந்து வந்து வீற்றிருந்த காரணத்தா லாயது. அதனைக் கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப் படலத்தில்,

"செங்கண் வெய்யசூர்ச் செருத்தொழி லினுஞ்சில வேடர்
தங்க ளிற்செயுஞ் செருத்தொழி லினுந்தணிந் திட்டே
யிங்கு வந்தியா மிருத்தலாற் செருத்தணி யென்றோர்
மங்க லந்தரு பெயரினைப் பெற்றதில் வரையே"

என்னுஞ் செய்யுளிற் காண்க. (உக)

(இதன்பொருள்.) ஐங்கைக் களிறு-ஐந்து கைகளையுடைய யானை, முன்புபோல் - முன்னை நாளில் புணர்த்தினவாறு போல, வேற்றுருவங் கொள்ளாமை - இற்றை நாளில் வேற்றுருவங் கொள்ளாமல், ஏரார் தணிகை இளவற்கு - ஏற்றமமைந்த திருத் தணிகைக்கண் இளையபிள்ளையார்க்கு, சீரார் தொடைபுனைந்த செம்பாவை - சீரும், தொடையுமாகிய வுறுப்புக்களால் தொடுக் கப்பட்ட செந்தமிழ்ச் செய்யுளை, நேராகக் கூட்டும் - நேர்மைப் பட வொப்புவித்து, எப்பொருளும் - (ஆற்றுப்படை யென்பதற் கேற்ற) எவ்வகைப்பட்ட பொருட்செறிவையும், காட்டும் - தெரிவித்தருளும் என்க.

ஐங்கைக்களிறு முன்போல வேற்றுருவங் கொள்ளாமை தணிகையிளவற்குச் செம்பாவை நேராகக்கூட்டி யெப்பொருளுங் காட்டுமென முடிக்க. இளவற்குச் செம்பாவை யென்பது விளக் கிற்கு நெய் என்பதுபோ னின்றது. முன்போல் என்றதற் கேற்ப இற்றைநாளென்பது வருவிக்கப்பட்டது. ஏர்பு என்பது குறைந்து நின்றது. கூட்டும் என்பது வினையெச்சமுற்று. ஆல் இரண்டும் அசைநிலைகள்.

ஐங்கைக் களிறு முன்புபோல் வேற்றுருவங் கொள்ளாமைக் கூட்டுமென்றதால், செம்பாவை போலும் வள்ளி நாச்சியாரை முன் இருகோடும் ஒரு கரமுமுள்ள காட்டுயானை வடிவாய்த் தோன்றி, இளவற்குக் கூட்டினவாறுபோலன்றி, இற்றை நாட்கண் ஒரு கோடும் ஐந்து கைகளும் உடைய வியற்கையுரு வாய்த் தோன்றி நின்று செந்தமிழ்ப் பாவைக் கூட்டுமென்றவா ருயிற்று. நேராக என்றதால் முன் நாச்சியாரை வழித்தடை செய்து அச்சுறுத்திப் பின் புணர்த்தினவாறுபோலன்றி, இற்றை நாளில் அடியேனை அஞ்சல் செய்யும் இடையூறு நீக்கிச் செம்பாவை நேர்ச்சியுறுத்து மென்றதாயிற்று. இரட்டுற மொழிதலால் சீரார் தொடைபுனைந்த செம்பாவை யென்றதனை மென்மைமிக்க மணமாலை புனைந்த செம்பொற் பாவையென நாச்சியாருக்குரைக்க. செம்பாவை செம்பொற்பாவை போல் வார் என விரிதலா லுவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை நிலை. இதில் பாவையையென இரண்ட னுருபு விரிக்க. செய்யுட்கெனின் அவ் வுருபு விரிந்தே நின்ற தாகலான். இவ்வகைத் தொடர்களை "வேற்றுமை யுருபுக ளல்லா தனவும் வேற்றுமை யுருபுகள் போல்வெளிப் படுமே" என்று கூறினது நுட்பவிதியா லுணர்க.

## நூல்

பொன்மலை என்பது முதல் ஆரா துகைப்பவுமென்னு மளவும் ஒரு முடிபு.

(க - உ) பொன்மலைத் திருவில் பன்னக நெடுநாண் மாயப் பகழித்தாயக் குரிசில் என்பது - மாமேருவாகிய பெருமையுள்ள வில்லிற்கும், சேடனாகிய நெடிய நாணிக்கும், மாயோனாகிய அம்பிற்கும் உரிமையையுடைய இறைவனது,

தாயக்குரிசில் என்றதால் ஏனையோர்க்கு அவை அவ்வா ருதற் குரிமையுடையவல்ல வென்பதாயிற்று.

(ங - ச) முரணமை இருகால் திரள்மறைப் புரவி அலர்மரை வாழ்க்கை வலவத்தேரும் - திங்களும் ஞாயிறுமாகிய சக்கரங் களையும், நான்மறைகளாகிய பரிகளையும், அலர்ந்த தாமரைப் பூவின்கண் வாழ்தலுற்ற நான்முகனாகிய பாகனையும் உடைத் தாகிய தேரும்,

குரிசிலது தேரும் எனக் கூட்டுக. முரண் என்றது - வெண்மை செம்மை இரவினும் பகலினு மாறிவருதல் பற்றி. திரள் என்றது - பலவாதல் பற்றி. அலர்ந்த தாமரை - திருமா லுந்தித் தாமரைமலர். உம்மை சிறப்பும்மை, முப்புரங்களையும் அழித்தற்கு உடம்படுதியென இந்திரன் முதலோர் வேண்டிக் கொண்டதற்கு இணங்கிய இறைவன் அது தவருது அவற்றின் மேல் சென்ற ஞான்று, பொன்மலையும், பன்னகமும், மாயனும், தத்தமுருத் திரிந்து, முறையே வில்லும் நாணும் பகழியுமென் றாகியும், அவை தமக்கேற்ற வகையில் போர்புரிதற்கு அமையா தனவாய் நின்றனவெனினும், தத்தம் இயற்கைத்தொழிலான் உலகை நிலைபெறுத்தலும், பூமியைச் சுமந்து தாங்கலும், உலகைக் காத்தலும் என்னுமத் தொழிற்கண் அமைவனவாய் நின்றமையின், இந்நூல் கேட்பார் ஊழ்வலியானுந் தீமை யணுகாராய் நல்லவையே பெறுவரென்பது கருதி நூலாசிரியர் அவ் வரலாற்றைக் குரிசிலுக்கு அடைமொழியாகக் கூறினரென் றுணர்க.

(ரு - எ) வழங்குதற்கமையா வண்மையி னிசைக்கும் பெருந்தகு பாடல் திருந்திசைப் புலவர் அறன்கடைக்கு அகலாப் பிறங்கு தம்முளத்தின் - கொடுத்தற்கியலாத பெருநலமுடைய சொற்களா லிசைக்கப்படுகின்ற மேதக்க பனுவலுணர்ச்சி நிறைந்த புகழ்மையுடைய அறிஞரது தீயன எண்ணுதற்கு ஒரு போதும் விரியாத தெளிந்த இதயத்தை யொத்த,

அறிஞ ரிதயமெனக் கூட்டுக.

(அ - கூ) சாலாக்கல்வி மாலார்க்கு அகலா வரன்மாண்டு அமைந்த உரன்மாண் பலகையில்-நிரம்பாத கல்வி மயக்கமுடைய புன் புலவரானுகி யிருத்தற்கு விரியாத வரங்களால் பெருமை

மிக்கதாய் நிறைந்த புலமையை நிறுத்துக்காட்டவல்ல சங்கப் பலகையினிடத்தே,

புலவருளத்தை யொத்த பலகை யென்க.

(க௦ - கக) தண்டா விருப்பின் எண்டோண் முதல்வனோடு ஆறுது பயிலிய அருமறைக்கேள்வி - இடையறாத அருளோடு வீற்றிருந்த அவ் விறையனாருடன் பிரிவின்றிப் பயின்றுள்ள அருமையான மறைகளின் நெறியுணர்ச்சியாகிய இன்பத் தினையும்,

இறையனார் சிவபெருமானே ஆதலால் எண்டோண்முதல்வ னென்றார். வேதநெறியை வேதமென்றது ஆகுபெயர். பயிலிய வென்னும் எச்சப்பொது கேள்வியென்னும் தொழிற்பெயர் கொண்டது. இறைவனது தேராகிய நிலன் பிறரால் கவரப் படும் நிலையின்மையவான பொருள்களைத் தருவதாதலானும், அவ்வாறன்றிச் சங்கப்பலகை கற்று வல்ல சான்றோர் முகமாக அவர்க்கும் பிறர்க்கும் பயன்படும் நிலையுள்ளனவாகிய அற முதலிய பொருள்களைப் பயப்பதாதலானும், அத்தேரும் வழங் குதற்கமையா வண்மையினென்றும், அத்தேர் இறைவன் திருவடியிடனும் நிலைகுலைந்து வாளாப்போந்ததாதலானும், கற்றுவல்ல புலவரது புலமையை இதுபோலச் சீர்தூக்கவல்ல மிக்க கடவுட்டன்மை உடையது அன்று; ஆதலானும், அதனி னுமிப்பலகையிடத்தே மிக்க விருப்பினராய் வீற்றிருந்தமை தோன்றத் தண்டா விருப்பி னென்றுங் கூறினர். வேண்டுதல் வேண்டாமையிலானுக்கும் அப்பலகைக்கண் வீற்றிருக்குமதோர் விருப்பந் தோன்றிற்றாலோ வெனின், அது தூய்மையு மந்திர வலிமையுமுடைத்தாதலானும், இறைவன்தானே நல்க நின்ற தாதலானும், அப் பலகைக்கண் வடமொழியில் உள்ள முத லெழுத் தைம்பத்தொன்றுள் ஆகார முதலிய நாற்பத்தெட் டெழுத்துக்களாகிய நாற்பத்தெண் புலவரோடு தலைமையும் வேறுபடாத இயற்கை ஒலியும் ஏனைய எழுத்துக்களனைத்தையு மியக்கும் ஆற்றலுமுள்ள அகரத்திற்கு முதல்வனாகிய விறை வன் நெடிது வீற்றிருந்தது தனது திருவருளானாகலான் அவ் வருளையே விருப்பென வுபசரித்தார்.

(கஉ - க௬) மாயிருந் தமிழ்க்கடல் வடமொழிக்கடலென்று ஆயிரு கடலும் ஆற்றலின் கடையா ஐயம் திரிபு என்னும் அழல் விடம் படாது வெய்ய செம்பொருளெனும் மிளிர்தீஞ் சுதைத் திரள் - மிகப்பெரிய தமிழ்மொழியாகிய கடலும் வடமொழி யாகிய கடலுமெனச் சான்றோரா லாராயப்படுகின்ற இருவகைக் கடல்களையும் அறிவாகிய மத்தினாற் கடைந்து (இது ஏகதேச

வுருவகம்) ஐயமுந்திரிபுமான அழல்கின்ற நஞ்சமெழாமே மிக்க செவ்விய பொருளென்னும் தூய்மைத்தான வினிய அமிர்த புஞ்சத்தையும், (இவையுருவகம்),

கடைஇத்தென்னு மெச்சம் ஆராது என மேல்வரும் முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது. ஓர் உருவை இருளிடையே கண்டு குற்றியோ மகனோ வெனத் துணிவுகொள்ளாமை ஐயம், ஒன்றனை மற்றொன்றாகவே துணிதல் திரிபு.

(கசு) ஆராக் காதலின் ஆராது கைப்பவும் - அடங்காத விருப்பத்துடனே அவற்றை நுகரவறியாமையால் வெறுக்கவும்,

சுவையென்றதற் கேற்பக் கைப்பவென்றார். ஆரா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இன் : உருபுமயக்கம். உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை. தாயக்குரிசிலது தேராகிய நிலனும் வழங்குதற்கமையா வண்மையுடைமையால், புலவருள்ளத்தினையொத்த சங்கப்பலகையினிடத்தே அவ்வெண்டோண் முதல்வனோடு பயிலிய அருமறைக் கேள்வியும் தீஞ்சுவைத் திரளும் ஆராது கைப்பவுமென முடிக்க.

ஊன்று விரல் என்பது முதல் கழலவும் என்னு மளவும் ஒரு முடிபு.

(கஎ - உ0) ஊன்று விரல் அழுந்தாது உடல் தசை திணிந்து கான்ற தேம் தெரியல் கருங்குழல் மகளிர்க்கு அணங்குளம் நிறீஇ ஆருயிர் கவர்க்கும் வளங்கவின் கொழிக்கும் விளங்குசீ ரிளமையும் - விரல்கொண் டமுத்திடின் உள்ளாழாதபடி உடம்புதசை திண்ணியதாய் மணங்கமழ்கின்ற மலர்மாலை புனைந்த கரிய கூந்தலுள்ள மாதரிடத்தே நோய்படும் உள்ளத்தை யொப்புவித்து, அரிய அறிவு முதலியவற்றைத் திறைபடுத்தா நின்ற கட்டழகு கிளர்ந்த இனிமை மிக்க விளமைப்பருவமும்,

உயிரி னியற்கையாகிய அறிவை யுயிரென்ற தாகுபெயர்.

(உக - உ௩) பல்வகைத் தொழிலும் பண்புற நவின்று சிந்தைவழிச் செலும் ஐந்தும் நிலைபெறீஇயர் அளவினைத் திறத்தின் அயரா யாக்கையும் - இயமநியம முதலிய பல யோக வுறுப்புக்களையும், அதனதனியல்பின்கட் குறையாமல் முறையே முற்றி உட்புலனாகிய மனம் போனவாற்றால் செல்லாநின்ற ஐம்பொறிகளும், அவை நுகர்வனவாகிய வோசை முதலிய வைந்து மடங்க அகப்படுத்தின அறவோர்க்குரிய ஒழுக்கங்களைப் பாகுபாடறிந்து நோற்கப்பெறாத வுடம்பும்,

திறத்தின் - ஆற்றலுக்கேற்ப வெனினுமமையும்.

(உச-உரு) அளகைக் கோமான் உளம் அழுக்கறுப்ப நிலம் தினக் கிடந்த நெடுநிதிச் செல்வமும் - அளகைக் கிறையான நிதிக்கிழவனும் தன் மனம் பொருமையுறுமாறு நிலனும் சுமக்கல் ஆற்ருது வருந்துமாறு கிடந்த பெரிய பொருட்செல்வமும்,

(உசு-உக) நீடின்றி இரியும் நிலைமை நாடி ஏற்போர் அங்கைக் கொடைக்கடன் இறுத்து நோற்போர் நோற்கும் நோன்மைசால் அறனெனும் உறுதி ஆக்கம் ஒய்யெனக் கழலவும்- நிலைமையின்றிக் கழிகின்ற தன்மையை யுள்ளுணர்ந்து இரப் பவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் ஈதலாகிய கடப்பாட் டினைச் செய்து வண்மையை விரதமாக் கொண்டார் அதனை யிகவாது காவாநின்ற பெருமைமிக்க தருமமென்னும் உயிர்க் குறுதிபயக்கும் பேறு நிலைநில்லாமற் கழியவும்,

இன்றி என்பது இன்று எனத் திரிந்து நின்றது. நீடு: முதனிலைத் தொழிற்பெயர். இளமையும், யாக்கையும், செல்வ மும் இரியும் நிலைமை நாடிக் கொடைக் கடனிறுத்து நோற்கும் உறுதியாக்கம் கழலவும் என முடிக்க.

வரைத்திர ளென்பது முதல் நேர் நடாவியும் என்னுமளவும் ஒரு முடிபு.

(௩0-௩க) வரைத்திரள் புரள்வின் திரைத்தெழும் திரைக் கணம் விலங்கின வழங்கும் விழுக்கலன் செறித்தும் - மலைகள் திரண்டு புரண்டு வரிசை வரிசையாய் வருவதுபோன்று சுருண்டு சுருண்டு மேல் எழுந்து வரும் கடலின் அலைகள் ஒதுங்குமாறு அவற்றைப் பிளந்து ஓடுகின்ற பெரிய வங்கமேற் சென்று பொருள்களை யீட்டியும்,

உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை.

(௩உ-௩ச) ஒளிறுவேல் அழுவத்து உருத்தெழுந்து அடர்த்து குளிறுவார் முரசும் பிளிறும்மால் யானையும் வைத்த பல்படையும் வழாது கைக்கொண்டு - விளங்குகின்ற வேல் முதலிய ஆயுதங்கள் வழங்கப்படுகின்ற போர்க்களத்திடத்தே சினந்தெதிர்ந்து போர்புரிந்து வென்று (ஒன்ரைது) முழங்காநின்ற வார் கட்டிய முரசங்களையும், மதச்செருக்கால் ஆரவாரிக்கா நின்ற பெரிய யானைக்கூட்டங்களையும், அவரது ஆட்சியில் வைக்கப்பட்டிருந்த பலவாகிய மற்றைப் படைத் திரள்களையும் அறைபோதரா வண்ணம் வயப்படுத்திக் கொள்ளுதலால்,

பல்படை என்றது இரதம், பரி, கரி, காலாள் முதலிய வற்றை. கொள்ள என்பது கொண்டெனத் திரிந்து நின்றது.

(கடு - கசு) பராபவத் தெவ்வர் வரிசையின் இறுக்கும் திறைகே ழுரிமை முறைநேர் நடாவியும் - தோல்வியடைந்த பகைமன்னர்கள் அணியணியாக வந்து செலுத்தும் திறையினைப் பெறுதற்குரிய பேரரசினைச் சிறப்பியல்பா னடாத்தியும்,

ஒன்னார்த் தெறுபொருளைத் தெவ்வரிறுக்குந் திறை யென்றது. கடன்மேற் கலஞ் செறித்தும் அடர்த்து கொண்டு நேர் நடாவியும் என முடிக்க.

(கள - கஅ) தத்தம் தொழிலில் தலைநின்று வளர்க்கும் பொருளெனும் வெறுக்கை போற்றாது நழுவவும் - அமைச்சர் முதலியோர் தத்தம் ஆள்வினையின்கண் முயன்று இடையறப் பெருக்காநின்ற பொன்னென்று சிறப்பித்துச் சொல்லப்படு கின்ற செல்வப்பொருள் ஈட்டினுரைப் பாதுகாவாமல் சொல்லா தேகவும்,

பொருள் ஈட்டினுர்மாட்டுச் சிறிது தவறுண்டாயினும் அந்நிலையே தனது நிலையாமை இற்றெனக் காட்டி வாளா போதலால் அதன்மீது ஆழ்ந்த பற்றுவைத்தல் தக்கது அன்று என்பதனை உணர்த்தவே அதற்குரிய பல பெயர்களுள் வெறுக் கப்படுவதென்னும் பொருண்மை நன்கு புலப்பட ஈண்டுப் பொருளெனும் வெறுக்கை யென்றார். ஒருவன் மிடுக்குற்றுப் பற்றிப் போற்றினும் போகூழ் வந்துற்றபோது அது நில்லா தாதலின் போற்றாது நழுவவும் என உரைத்தார்.

மிஞிறென்பது முதல் மாதரை யென்னுமளவும் ஒரு முடிபு.

(கக - சக) மிஞிறும் தேனும் வெறிகவர் தும்பியும் கஞலிப் பண்குரல் கஞற்றுவ சுழலும் இருள்துஞ்சு மலர்ப்பொழில் மருள்சில் லோதி - மணத்த மதுக் கவர்கின்ற மிஞிறு தேன் தும்பியென்னும் வண்டினம் நெருங்கிப் பண்ணுங் குரலோசை யும் கலப்பனவாய்ப் பாடிச் சுற்றுதற்கிடனை இருள் தங்கின மலர் செறிந்த பொழிலோவென மருளத்தக்க சில்லென்னுந் தலைப்பணி யணிந்த கூந்தலினையும்,

மிஞிறு - ஆண், தேன் - பெடை, தும்பி - வேறொரு வண்டின் சாதி. பொழிலும் எனச் சிறப்பும்மை விரித்துப் பொழிலும் மருளத்தக்க வோதி யெனினுமமையும். சில் என்பது சின்மை மென்மை யென்னும் பொருட்டு.

(சஉ - சக) பூவார்சோலைப் புறத்தகப்படுத்து மேவரத் தடைஇய விதுக்குறை கடுக்கும் திவள்ஒளி மாண்ட குவவு நுதல் - அக் கூந்தலாகிய மலர் நிறைந்த சோலையின் புறத்தே

அதனை யுட்படுத்திக் கொண்டு தங்குமாறு தடையிட்ட குறைமதி போல்கின்ற பரவின வொண்மை மிக்க பெரிய நுதலினையும்,

(௪௪ - ௪௭) வாணுதல் திங்கதிர் அமிழ்தத்திங்கள் பிளவின் நீங்குகார்க் கறையும் நிலாத்தவழ் வெண்மையும் விராய் உருக் கொண்டென மிளிர் மதர் மழைக்கண் - விளக்கமுள்ள அந்நுத லாகிய தண்ணிய கிரணத்திற் கிடனான அமிர்தவுருவான அக் குறை மதியினின்று நீக்கமுற்ற கரியகளங்கமும், அதன் நிலவின் வெண்மையும் விரவி உருக்கொண்டாலொத்த மாசில்லாத மதர்த்த குளிர்ச்சியான கண்ணினையும்.

குறைமதிக்குக் களங்க மின்மையின் நீங்குகறையென்றனர். இது வண்ணவுவமம், நிலவின் களங்கமும் வெண்மையும் ஒரோ வழிக் கலந்துருக் கொண்டாலொத்த கண்ணெனவே அவை அங்ஙனமாகி யுருத்திரிதலின்மையால் வேறுவமம் அக் கண்கட் கமையா தென்றவாறாயிற்று.

(௪௮ - ௪௯) செங்குமுதத்துச் சிறுமதி கிடந்தெனச் செவ் வாயகத்த செய்திர் வெண்பல் - செங்குமுதப் பூவினில் இளம் பிறை கிடந்தா லொத்ததாய், செவ்வாயினிடத்து அழுக்கடை யாத வெண்மைத்தான பல்வரிசையினையும்,

(௫௦ - ௫௧) விலங்குபாய் கதிர்க்குழை வீழ்ந்து செகில்துயல் வர வள்ளையின் ஒழுக்கிய அள்ளெழில் செஞ்செவி - விலகிப் பரவாநின்ற ஒளியையுடைய குழைகள் நான்று தோண்மே லிடத்தே அசையா நிற்ப வள்ளைப் பூவைத் தொங்கவிட்டாற் போலத் தாழ்ந்த அள்ளிக் கொள்ளும்படி செறிந்த அழகுள்ள செவியினையும்,

செஞ்செவி வார்ந்து தாழ்ந்து மடற்சுழி வலஞ்சூழ முன் புறத்தே தள்ளின செவி.

(௫௨ - ௫௩) செவ்வாய் கவுட்டுணைச் சேல்விழி நெற்றி இவ்வாயுறுப்பான் இன்சுவை அமிழ்த உறுகொடை யாற்றி வறிதுகொடை காட்டும் வளைநிதி தன்னைக் குடுமிகைக் கொண்டு அவ்வளைமேல் கொண்டு மயங்கு ஒளி தோற்றும் பதுமநிதி இதுவெனக் கவின்று தாவா உறுவர் மேவாவுள்ளமும் ஒவப் படமென உளூற்றுறு திருமுகம் - செவ்வாயும், இரண்டு கன்னங் களும், சேல் மீனை யொத்த கண்களும், நெற்றியுமான வுறுப்புக் களைக் கொண்டு இனிய சுவையுள்ள அமிழ்தமாகிய பெரிய வண்மையைச் செய்து வறிய கொடையைக் காட்டாநின்ற சங்க நிதியை அதன் தலையைக் கைப்பற்றி அதன் மேலதாய்ப் பொருந்தி மிக்க பொலிவை வெளிப்படுத்துகின்ற பெரிய பதும

நிதியிஃதென்று வியந்து கவற்சியாகிக் கேடில்லாத மாதவரது ஒன்றிலும் பற்றாத வுள்ளமும் தன்னிலை பெயர்ந்து தடுமாறும்படி ஓவியப்படம் போல நான்முகனாற் படைக்கப்பட்டுள்ள அழகிய முகத்தினையும்,

உம்மை சிறப்பும்மை. ஒன்றிலும் பற்றின்மையாவது கூடும் அன்பினில் கும்பிட லேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்குதல். முகம் செவ்வாய் முதலிய வுறுப்புக்களி னிருக்கையதாக லானும், அவற்றைக் காம நூலுடையார் அமிழ்த நிலைகளெனக் கோடலானும், முகம் அவற்றைக் கொண்டு அவ்வமிழ்தத்தினை வழங்குலாகிய கொடையைக் காதலர்க்களிக்கின்றதென அதன் தொழிலாக வுபசரித்தார். அம்முகம் சங்கு போன்ற கழுத்தின் மேலதாய் நிற்றலின் அதனுருவாயுள்ள நிதி அவ்வா றமுதத்தினை யளிக்க மாட்டாமையால், அது தரும் ஏனைய பொருள்களை வறிது கொடையென்றும் அது காரணமாகத் தன்னிற்றாழ்ந்த தாகலின், குடுமியைப் பற்றித் தோற்றார் பிடர்மேல் வென்றார் ஏறுதல் முறையாக மேல்கொண்டு என்றுங் கூறினர். இனி முகத்திற்குவமம் தாமரை யாகலின் அதனுருவாய் நின்று பயன்படும் பொருள்களை யுதவா நின்ற நிதியே இதுவென வியப்பும், தம் மனத்தையுங் கவர்தலால் கவற்சியுமிக்கு அறவோரதுள்ளமும் நிலைதடுமாறும்படி படம்போல்வதாயமைந்தது என வணிந்துரைக்கப்பட்டது.

(௪0 - ௪௩) பகுவாய்ப் பொற்குழை மகரமீன் நான்று ஐது மீக்கிடத்தலின் ஐங்கணைக் கிழவோன் வெய்து தன்னாணை விளக்கிய வுயர்த்த அணங்குதவம் கொடியின் இணங்குபணை வேய்த்தோள் - அம் முகத்தின் பாங்கர் அங்காந்த வாயையுடைய சுறுமீன் வடிவாகப் பண்ணின பொன்னாலாகிய குழை தூங்கி, (பகுவாய் மகரப் பொற்குழை யென மாறுக.) வேய்த் தோளின் மேல் அடர்ந்து அசைந்திருத்தலால், ஐந்து மலர்களாகிய அம்புகளையுடைய மன்மதன் கொடிதான தனது ஆணையை யாவர்க்கும் புலப்படுத்துமாறு உயர நாட்டின விருப்பத்தோடு நிகழாநின்ற கொடிக்கம்பம் போலத் தம்மி லிணையொத்த பருத்த மூங்கில் போன்ற தோள்களையும்,

தோளின்மீது மகரக்குழை கிடந்து அசைவது மன்மதனுடைய மீன் கொடி போன்று இருந்தது.

(௪௪ - ௪௫) காம்பு புடையடுத்த கதிர் மணிக்குன்றின் தோள்புடையடுத்த சுடர்ப்பூண் கொங்கை - அம் மூங்கில்கள் பக்கத்தின்கண் நெருங்கியுள்ள ஒளிமிக்க மணிகளாற் பொலிந்த குன்றுகளைப் போலத் தோள்களினருகே நெருங்கின சுடரொளியைக் காலுகின்ற மணியணிகள் செறிந்த முலைகளையும்,

(௬௬ - ௬௯) குவிமுலைத் துணைகொள் சவிமணிமார்பில் தத்தமது ஏணி கடவாது தணியநள்ளு நின்றுணர்த்தும் தள்ளாக் குறியின் அணிவயிற் றொழுகிய மணிமயிர் வல்லி - அக்குவிந்த கொங்கைகளை யேந்தின விளக்கமான அழகிய மார்பினிடத்தே அம் முலைகள் தமக்குரிய எல்லைகடவாமல் தங்கும்படி நடுநின்று வரையறை யுணர்த்தா நின்ற நீக்கப்படாத அடையாளம்போல மென்மையான வயிற்றின்கண் ஒழுங்குறப் பொருந்தின கரிய மயிர் ஒழுங்கினையும்,

(௭0 - ௭௨) நெடுகுமயி ரொழுக்கு நெடுவழிப் படர்ந்து கடுமுலைக் கோட்டுக் களிறுபட எடுத்த படுகுழி அனைய பயம்படு கொப்பூழ் - அங்நீண்ட மயிரொழுக்கமான நெடிய வழியே சென்று பருமை தம்முளொத்த முலைகளாகிய கோட்டியானைக ளகப்படுமாறு அகழ்ந்த கொப்பம் போன்று ஆழ்ந்த வுந்தி யினையும்,

கடுத்தல் ஒப்பு.

(௭௩ - ௭௪) நடுநின்று வாழ்வோர் நலத்தொடு முரண நடு நின்று தேய்ந்த இடுகுகொடி மருங்குல் - நடுவு நிலைமைக்கண் தங்கி வாழ்வாரது ஆக்கத்தொடு மாறுகொண்டு நடுவே நின்றும் வறுமை கூர்ந்த இளகின கொடியை யொத்த இடையினையும்,

நடுவு நிலைமைக்கண் நின்றவர்க்குப் பெருக்கமே யுளதாவ தன்றித் தேய்வு ஒருபோதும் உளதாகாதென்பது ஒருதலையா யிருந்தும், நடுநின்ற இடை அங்ஙனம் பெருகுதலின்றித் தேய்ந் தமையான் அவர் நலத்தொடு முரணவென்றார். இஃதோரிலக் கணை.

(௭௫ - ௭௭) வையகம் உயிர்த்தோன் மதிபுனைந்து இயற்ற லின் கை புனைந்தியற்றுங் கதிர்மணித் திண்டேர் கடாது உருக் கொண்டு ஓடும் தடாத பேர் அல்குல் - உலகங்களையீன்ற நான் முகன் மதிமிக்குப் படைத்தவாற்றால் யவனர் கைத்தொழில் வல்லரா யியற்றின கதிரொளியைச் செய்கின்ற திட்பமான தேரினை யொவ்வாமல், இயற்கை யுருவிற்றாய் ஆடவர் உள்ளந் தோறும் விரைந்து செல்லும் செலவிற் றடைப்படாத அகற்சியையுடைய அல்குலினையும்,

யவனர் கையாலியற்றின தேர், இத்துணை வலிமைத்தன்று மாகலின் அவ்வுருக் கொண்டோடும் தடாத பேரல்கு லெனப் பட்டது.

(௭௮ - ௭௯) கீழ்மேலாகக் கிளர்ந்து எழின் அத்தகு வாழை யொடு பொரூஉம் வார்ந்த செறிகுறங்கின் - பருத்த அரைமேல

